கவிஞாயிறு

# தாராபாரதி யின்



# விரல்நுனி வெளிச்சங்கள்



**இரா. ஜானகிராமன்**
விற்பனை மேலாளர்
(பணி நிறைவு)
கோ - ஆப்டெக்ஸ்
தில்லையாடி வள்ளியம்மை
பட்டுமாளிகை - சென்னை - 8

**'யான் பெற்ற இன்பம்
பெறுக இவ் வையகம்'**

என்னுடைய மாமா கவிஞாயுறு அமரர் தாராபாரதியின் நூல், **'விரல் நுனி வெளிச்சங்கள்'** மூத்தவர்க்கான சிந்தனை முத்துக்களும் இளையவர்க்கான எழுச்சி வித்துக்களும் நிறைந்த எண்ணப் புதையல்.

இந்தக் கவிதை வரிகள் மூலம் நான் பெற்ற புத்துணர்வையும் அனைவரும் பெற வேண்டும் என்னும் எண்ணத்தில் - நான் பணி நிறைவு பெறும் இந்த நன்னாளில் (31.07.2016) இந்த நூலினைத் தங்களுக்கு வழங்குவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

மனை எண் 30B
மேயர் சிட்டிபாபு தெரு
பம்மல் - 600 075

அன்புடன்,
**இரா. ஜானகிராமன்**
(பணி நிறைவு)
98845 09769




தலைமுறையின் இணையற்ற கவிஞர்

## கவிஞாயிறு

## தாராபாரதியின்

# விரல் நுனி வெளிச்சங்கள்

தொகுப்பு : ஓவியக்கவிஞர் மலர்மகன்

**கவியரசன் பதிப்பகம்**

எண். 5, மேடவாக்கம் முதன்மைச் சாலை,

வாணுவம்பேட்டை, சென்னை - 91.

# கவிஞாயிறு தாராபாரதி

## கல்வெட்டு

| | | |
|---|---|---|
| இட்ட பெயர் | : | இராதாகிருட்டினன் |
| எடுத்த பெயர் | : | தாராபாரதி |
| அன்னை - தந்தை | : | புஷ்பம் - துரைசாமி |
| சொந்த மண் | : | குவளை (திருவண்ணாமலை மாவட்டம்) |
| தோற்றம் | : | 26-02-1947 |
| மறைவு | : | 13-05-2000 |
| துணைவி | : | சந்தானலட்சுமி |
| மக்கள் | : | விவேகானந்தன், லோகு துரை, ஆண்டாள் |
| உடன்பிறப்புகள் | : | துரை. சீனிவாசன் (மலர்மகன்) புலவர். துரை. மாதவன் |
| பட்டம் | : | எம்.ஏ., பி.எட். |
| பணி | : | ஆசிரியர் |
| பணி விருது | : | தமிழக அரசின் டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது - 2000 (நல்லாசிரியர் விருது) |

## முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்



# தமிழ் மண்ணில் நிலைத்திருக்கும்

வள்ளுவரின் வாழ்வியல் நெறியும்
இளங்கோவின் இன உணர்வும்
பாரதியின் விடுதலை வேட்கையும்
பாவேந்தரின் மொழிப் பற்றும்
ஒன்றிணையப் பாடிவந்த
**தாராபாரதி** நம்மோடு இல்லை
எனினும் அவருடைய பாடலடிகள்
நம் நெஞ்சில் என்றும்
நிறைந்திருக்கும் - பதிந்திருக்கும்

## கவிஞாயிறு தாராபாரதி நூல்கள்

- புதிய விடியல்கள் (1982)
- இது எங்கள் கிழக்கு (1989)
- விவசாயம் இவர் வேதம் (1922)
- பண்ணைபுரம் தொடங்கி பக்கிங்காம் வரை (1963)
- தாராபாரதி கவிதைகள் (2000)

## பெற்ற விருதுகள்

- கண்ணதாசன் விருது (1990)
  (இலக்கிய வீதி)
- கவிஞாயிறு விருது (1993)
  (திருவள்ளுவர் இலக்கிய மன்றம்)



## இளைஞனே....

வெறுங்கை என்பது மூடத்தனம் – உன்
விரல்கள் பத்தும் மூலதனம்!

பூமிப் பந்து என்ன விலை? – உன்
புகழைத் தந்து வாங்கும் விலை!

விழி, விழி உன்விழி நெருப்புவிழி – உன்
விழிமுன் சூரியன் சின்னப்பொறி!

கிழக்குத் தானாய் வெளுக்காது – அதைக்
கிழிக்கா விட்டால் சிவக்காது!

> விரக்தி என்னும் சிலந்தி வலைக்குள்
> வேங்கைப் புலி நீ தூங்குவதா?

எழு எழு தோழா உன் எழுச்சி – இனி
இயற்கை மடியில் பெரும்புரட்சி!

> சோற்றுக்கா உன்னுடம்பு;
> சோம்பலுக்காக நீ விருந்து?

காற்றுக்குப் புதிய திசை
காட்டலாம் வா எழுந்து!





உழைக்க வேண்டிய விரலிடுக்கில்

ஒட்டடை படிய விடலாமா?

புடம் போடத்தான் இளம்பருவம் – அது

புதைகுழி போகும் வயதல்ல!

முப்பதைத் தொடுமுன் மூப்புத் தொட – உன்

மூச்சில் முதுமை வரலாமா?

தப்புகள் வந்து தங்கிவிட – உன்

தசையின் முகவரி தரலாமா?

விரைக விரைக, உன் விரல்கள் உழுபடை;

தரிசு நிலங்களில் தங்க அறுவடை

தசைக ளுக்குக் கொஞ்சம்

தன்மானப் பயிற்சி கொடு!

விதிரேகை என்பதனை

விஞ்ஞான ரேகையாக்கு!

எத்தனை உயரம் இமயமலை – அதில்

இன்னொரு சிகரம் உனதுதலை!

சுட்டு விரல்நீ சுருங்குவதா – உன்

சுயபலம் உனக்குள் ஒடுங்குவதா?

தோள்கள் உனது தொழிற்சாலை – நீ

தொடுமிடம் எல்லாம் மலர்ச்சோலை!





எத்தனை ஞானியர் பிறந்த தரை – நீ
இவர்களை விஞ்சிட என்ன தடை?

> வெறுமை இந்த உலகென்று – ஒரு
> விரக்தி உனக்கு வரலாமா?

சுழலும் பூமியின் சுழற்சி விசையை
எழுதி இயக்கும் கட்டைவிரல் நீ!

> சூரியத் தேரின் சுழற்சியை மாற்றும்
> வீரிய சக்தி உன் விஞ்ஞான சக்தி!

என் உயரம் இதுவென்று எழுந்துநில்!
விண்ணுயரம் கூடஉன்
விலாவுக்குக் கீழேதான்!

# அமைதி

நெஞ்சக் கதவைத் திறந்துவிடு
நேசக் காற்று வீசட்டும்!

நேற்றைய பகைமை இனி எதற்கு – உன்
நிழலின் மீதா வெறுப் புனக்கு!

குண்டுகளைக் குழிதோண்டிப் புதை
தொண்டுகளைத் தோளில் விதை!





போர்த் துப்பாக்கியைப் பூமியில் நட்டுவை
பூங்கொடி யை அதன் மேலே சுற்றிவை!

> தோப்பு மரங்கள் நாம் யாரும்! – ஒரு
> தொப்புள் கொடிதான் ஆதாரம்!

குண்டுகள் பொழியும் பீரங்கி வாயில்
வெண்புறாப் பேடை முட்டையிடட்டும்!

> மலர்க மலர்க உன் மனித உறவுகள்;
> உலகின் கூரையில் உனது சிறகுகள்!

தொப்புள் கொடிகள் வேறாகும்
தேசியக் கொடிநம் வேராகும்!

## நம்பிக்கை

விட்டுத்தள்ளு இன்னுமென்ன விரக்தியுனக்கு?
– புது
விடியலுக்கு நம்பிக்கைதான் பச்சை விளக்கு!

> உன்னை உயர்த்தும் நம்பிக்கை – இந்த
> உலகை உயர்த்தும் உந்தன்கை!

நம்பிக்கை வந்தால் போதும்
நம்கைகள் வானை மோதும்!





உலகம் முழுதும் ஒருபகலை – இனி
உழைக்கும் தோள்கள் ஒளிபரப்பும்!

| |
|---|
| தொற்றிய சோம்பலைத் தூக்கியெறி;<br>தோள்களில் பூமியைத் தாங்கிப் பிடி! |

சொந்த மாகத் தொழில்தொடங்கு!
சுற்றுமிப் பூமி உனைத் தொடர்ந்து!

| |
|---|
| வெற்றியை எட்டும் நோக்கமிருந்தால்<br>ஒற்றைச் சிறகிலும் பறக்கலாம்! |

மண்புழு வல்ல மானிடனே – உன்
மாவலி காட்டு வானிடமே!

## மனிதா...

சோர்வுகள் நமக்குப் போர்வைகள் அல்ல;

வேர்வையும் உழைப்புமே வேட்டி சட்டைகள்!

சிக்கனம் தேவை, உழைப்பில் அல்ல!

சேமிக்க வேண்டும் வியர்வையை அல்ல!

திண்ணையை இடித்துத் தெருவாக்கு – உன்

தெருவை மேலும் விரிவாக்கு!





ஒருமைப்பாடு குறைபாடு –
உண்மை போனது சுடுகாடு!

சின்ன இருட்டுகள் மறையவில்லை – அந்தச்
சிவப்புச் சூரியன் வரவில்லை!

விண்ணைக் குலுக்கு மனிதா நீ – ஒரு
விண்மீன் கூட உதிராமல்!

செத்தால் உன் புகழை பூமி
சேமித்து வைக்க வேண்டும்!

நம்மை நாமே சுரண்டுவதா;
நகமே விரலை விழுங்குவதா?

ஒழுக்கம் யாவும் தரைமட்டம்
ஊழல் களுக்குப் பரிவட்டம்!

> சிறுமை களுக்குச் செல்லுபடி
> சில்லரை களுக்குப் பல்லக்கு!

உடற்குறை உனக்குப் பொருட்டல்ல – இந்த
உலகம் என்பது இருட்டல்ல!

> வளர்ந்தபின் வளைவது பெருமை;
> வளைந்தே வளர்வது சிறுமை!

மண்ணைப் புரட்டு மனிதா நீ – ஒரு
மண்புழு கூட நசுங் காமல்!





சுரண்டப் படுவது நம் சொத்து – இனி
சும்மா இருப்பது ஆபத்து!

ஆயுதங்களை அழிக்கும் ஆயுதம் – நம்
அன்பில் விளையும் நிராயுதம்!

இருந்த பெருமை நினைத்துப்பார்
இழந்தவை என்ன, கணக்குப்பார்!

துக்கதினம் நாட்டில் குறைவில்ல;
மக்கள் தினம் மண்ணில் வரவில்லை!

நாடுகளால் பிரிந்தாலும் – துடிக்கும்
நாடிகளால் மனிதர் நாம்!

அறிவுக்குப் பஞ்சமில்லை நம்மிடத்தில்,
ஆக்கமில்லை; எதனால்? ஆர்வமில்லை!

திறமைக்குக் குறைவில்லை; எனினும்
தேக்கநிலை; ஏன்? ஊக்கமில்லை!

பூட்டிய இதய வீட்டுச் சுவரில்
புன்னகை என்றொரு சன்னல்வை!

ஊனம் உனக்கெதிர் படையல்ல – நீ
உயர்ந்திட அதுஒரு தடையல்ல!

புதிய அச்சில் பூமிப் பந்தை – உன்
புருவ மத்தியில் சுழல விடு!





## சாதி - மதம்

சாதிக்கா பிறந்தவர் நாம்? – இல்லை
சாதிக்கப் பிறந்தவர்கள்!

> 'சாதிக்காய்' மருந்தாகும்; ஆனால் இந்த
> 'சாதி'க்காய் எட்டிக்காய் போன்றதாகும்!

மேல்வகை வாய்க்கணக்கு – தினம்
மிதிபடும் கீழ்க்கணக்கு!

சமயக் குறிகளுக்குச் சமக்குறியே தெரியாதா?
சமயத் துறைகளுக்குள் சச்சரவே தீராதா?

> விதியைத் துரத்து, வீதியைத் திருத்து;
> சதியை உடைத்துச் சாதியைத் துரத்து!

நெற்றியில் வெளிப்பூசல் – நித்தமும் உட்பூசல்!
உற்ற மதக்குறிகள் ஒவ்வொன்றும் தினப்பூசல்!

> சேரிகள் ஊர்ப் புறத்தில் – வெறும்
> சேர்க்கைகள் காகிதத்தில்!





## தாய் மொழி

தாய்மொழிக் குத்தான் நாற்காலி;
தடுப்பவன் யாரவன்; கருங்காலி!

தாய்மொழி தமிழை மறந்தவன்;
தப்புவிதை யாய்ப் பிறந்தவன்!

நாக்கு என்ன தமிழுக்கு மயானமா;
நன்றி கெட்ட தமிழா, இதுநியாயமா?

அன்னைமொழி கற்பதற்கேன் தயக்கம்;
அயல்மொழிமேல் உனக்கென்ன மயக்கம்?

> அமிழ்தூறும் நரம்புகளில், தமிழ்ப்படித்தால்!
> அதுதானே நீமுதலில் குடித்த தாய்ப்பால்!

தமிழ்உன் மூச்சின் மூலதனம் – நீ
தடைகளைத் தகர்க்கும் காளையினம்!

> வாய்மொழிகள் வரிசையிலே முதலில் உந்தன்
> 'வாய்'க்காலில் தாய்ப்பாலே வரட்டும் தம்பீ!





இனத்தைக் காக்கக் கொடியுயர்த்து
இழந்ததை மீட்கத் தோளுயர்த்து!

'பிள்ளைத் தமிழ்' படித்தவர்கள் கூடத் தங்கள்
பிள்ளை – 'தமிழ்' படிப்பதனை விரும்பவில்லை!

நந்தமிழ் தன்னைப் பயிலாமை
நம்மவர் நாவின் கொள்கைகளா?

பைந்தமிழ் வழங்கும் தாய்ப்பாலைப்
பருகக் கன்றுகள் மறந்தது ஏன்?

சொந்த மொழியைப் பாதிக்கும்
சோற்று மொழிகளின் ஆதிக்கம்!

தேவாரம் பிரபந்தம் திருவாசகம் அருட்பா
நாவாரப் பாடினால் நாதன்செவி கேளாதா?

நிமிர்வாய் தமிழா, எழுவாய் – அட
நீதான் உலகின் எழுவாய்!

தாய்மொழியில் பாய்மரத்தை விரிக்கலாம் வா;
தமிழ்ச்சிறகால் வானத்தை அளக்கலாம் வா!

மொழிக்களவுகோல் நாக்கு; நமதுநாக்கில்
மொழி 'களவு' போகிறதே தடுக்க வேண்டாம்?

பொன்னியில் குளித்த புனிதத் திருமொழியைச்
சன்னிதியில் பாடினால் சாமிக்கா தீட்டுவரும்?





## வரதட்சணை

அன்னை வீட்டிலிவர் ஆயுட்கைதிகளாம்!
கன்னியர்க்குத் தாய்வீடே கன்னி மடம் ஆகிறது!

சீர்கள் தருகிற சாதனமா – பெண்
சீதனம் சுமக்கிற வாகனமா?

பெண்ணாற்றில் பேரணைகள்,
பெருகும் 'வர தட்சணைகள்'!

பூப்படைந்த பின்புமிவர் – பூவாத தாவரங்கள்!
காப்பில்லை என்பதனால் கனியாததனிமரங்கள்

சீதனமின்றித் தாய்வீடே – சிலர்
சிறையாய் மாறியது!

உள்ளத்தில் 'தங்கம்'; உடலிலது குறைந்ததனால்
தள்ளுபடி ஆனாள்; தன்விதியை நோவாள்!

தேன்முல்லைக் கொடிகளுக்குத்
தேவை தேர்களல்ல; பாரிகள்!

மூலைக் கிழங்கள் இரண்டோடு – இவள்
மூன்றாம் கிழமானாள்!





## ஏழ்மை

உங்கள் உயரம் தானவர்கள்;

உட்கார்ந் ததனால் தெரியவில்லை!

மூலையில் முடக்கிய மூலதனம் – வெறும்

மூச்சைச் சுமக்கிற ஏழையினம்!

மக்கள் பதிப்பில், ஏழைகளை

மலிவுப் பதிப்பாய் எண்ணாதீர்!

எதிர்பார்ப்பில் வருவதில்லை ஏற்றமே – உன்
எதிர்ப்புகள்தான் கொண்டுவரும் மாற்றமே!

சலுகை யல்ல விரும்புவது;
சமமாய் உரிமை எப்போது?

தோள்தட்டு உணரும் மிராசுத்தட்டு;
தொடரும் சமஉரிமைத் தராசுத்தட்டு!

சமவெளியை விரும்பாத மேடுகள் – அதன்
சரிவுகளில் தான் 'வறுமைக் கோடுகள்'!

பாலுக்கும் ஆடையுண்டு; ஆனாலிந்தப்
பாமரர்க்கு அதுவுமில்லை; சாபக்கேடு!





நூலுக்கும் கஞ்சியுண்டு பாவமிங்கு
நொந்தவர்க்கு அதுவுமில்லை வெட்கக்கேடு!

வேளைக்கு எரியாத வெற்றடுப்பு
வெறும் வயிற்றில் அணையாத பசிநெருப்பு!

சுற்றிதினம் வயிறொட்டி வாடுவோர்க்கு
சுவரொட்டி வாசகமா சோறு போடும்?

முழுத்துணியா கேட்கின்றார் – பாவம்,
முழத்துணிக்கே ஏங்குகிறார்!

மேட்டுக்கு வியர்வை நீர் பாய்ச்சிக் கொண்டே
மிகத்தாழ்ந்து கிடக்கிறது உழைக்கும் வர்க்கம்!

தனது முதலாளியைத் தசைமண்டலமாக்கி
எனது தோழனிவன் எலும்புமண்டலமானான்!

முழுதுண்டு படுத்ததில்லை – ஏழை
முழத்துண்டு உடுத்ததில்லை!

இவன்முதுகு சுமைதாங்கி; இருதோள் இடிதாங்கி
இவன்வயிறு அடிதாங்கி; இருக்கின்றான்
உயிர்தாங்கி!

பங்கு தரட்டுமே பாதி முதுகுகள்!
எங்கு நோக்கினும் ஈரவயிறுகள்!

தீர்க்க முடியா வறுமைக் கோடு
தேசத் திற்கொரு அவமானம்!





## சுற்றுச் சூழல்

சுற்றம் தழுவ ஒப்புரவு – நல்
சுற்றுச் சூழலில் துப்புரவு!

பட்டமரம் ஒன்றை வெட்டும்போது
பக்கமரம் பதிலாக நட்டுவைப்போம்!

கரிப்புகை கக்கும் வாகனங்களுக்குக்
காற்று மண்டலம் கழிப்பிடமா?

ஓசோன் மண்டலக் கிழிசலைத் தைக்க
ஊசிகள் புதிதாய்க் கண்டுபிடி!

உலகத் தரையைக் கழுவிவிடு – முதலில்
உனது நகத்தின் அழுக்கையெடு!

சுற்றம் தழுவு; சுற்றத் தோடு
சுற்றுச் சூழல் சுத்தம் தழுவு!

# கவிஞாயிறு தாராபாரதி

## நினைவைப் போற்றிய நிகழ்வுகள்

### அமைப்புகள்

- திருவள்ளுவர் இலக்கிய மன்றம் 17.6.00
- முகில்முரசு (தாராபாரதி நினைவுமலர்)
- இலக்கியவீதி – மதுராந்தகம் 30.7.00
- கவிஞாயிறு நினைவகம் திறப்பு 19.8.00 (கவிமுகில் இல்லம், புழுதிவாக்கம்)
- 'தாராபாரதி வீதி' பெயர்சூட்டல் 19.8.00 (புழுதிவாக்கம்)
- திருக்குறள்பேரவை 19.8.00 (நங்கைநல்லூர்)
- தொடுவானம் (வளசரவாக்கம்) 10.9.00
- தமிழ்ச்சான்றோர்ப் பேரவை 2000 (இசைவிழா – தாராபாரதி அரங்கம்)

### இதழ்கள்

- நந்தன் (சூன்)
- மாணவர் தாகம்
- முகம் (சூன்)
- பாரதிதாசன் கவிதாமண்டலம் (மே – சூன்)
- தமிழர் கண்ணோட்டம் (சூன்)
- கவியமுதம் (சூன்)
- கவித்துளி (மே)
- மின் அம்பலம் (மே) (இணைய இதழ்)

**தொடரட்டும் இந்தப் பட்டியல்!**